உ

கடவுள் துணை.

சுப்பிரமணியக்கடவுள்பேரில்

# சிவசெந்திமாலை

காங்கயம்பாளையம் புஸ்தக வியாபாரம்



கா. ர. வாபுசெட்டியார் விருப்பத்தின்படி,

சென்னைப்புரசை
நாராயணசாமிப்பிள்ளை அண்டு பிரதர்
அவர்களது
...லாச அச்சியந்திரசாலையிற்
...க்கப்பட்டது.
...922. [அணா-1.
...முதலிவீதி, புரசை, சென்னை.

உ

சிவமயம்.

சுப்பிரமணியக் கடவுள்பேரில்

# சிவசெந்திமாலை.



இஃது

சென்னைப்புரசை

நாராயணசாமிப்பிள்ளை

அன்டு பிரதர் அவர்களது

நற்றமிழ்விலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை] 1922. [அணா-1.

37, சரவணப்பெருமாள்முதலிவீதி, புரசை, சென்னை.



சுப்பிரமணியர்பேரில்

# சிவசெந்திமாலை.

---

## வெண்பா.

காட்டுவழிபோனாலும் கள்ளர்பயமானாலும்
கேட்டுவழிகாலனார் கிட்டுகிலும்—நாட்டமுடன்
நம்பிக்கையாக நமக்குவிநாயகனார்
தும்பிக்கையுண்டு துணை.

செந்தில்வளர்நாயகனே சிவனேயுந்தன்
சீர்பாதம்போற்றிசெய்து சிறப்பாய்பாட
வந்துதமிழ்வாக்கருளும் வாலைத்தாயே
மலரடியைநானடியேன் வருந்திசித்தம்
தந்திரமாய்சடாட்சரத்தை தியானஞ்செய்ய
சரஸ்பதியும்சாமுண்டி வீரவாகு
செந்தில்வாழ்விநாயகனே முருகாஐயா
சீர்பாதமென்னுளுஞ் சரணங்காப்பே. 1

ஈசன்மகிழ்பொதிகைமுனி குருவுமாகி
யீராறுகைதனிலே வேலுமேந்தி
பாசமுடன்மயிலேறி அசுரரைவென்று
பண்பானஅமரருட துயரந்தீர்க்கு
தேசிகனார்செந்திலவடி வேலர்மீதில்
தீர்க்கமாயன்பத்தோர் கவிநான்சொல்ல
மாசிலாப்பரஞ்சோதி ஒற்றைக்கொம்பன்
மலரடியையனுதினமும் வணங்குவோமே. 2

காருகந்தமேனியனு மயனுங்காணா
கடவுளர்க்குஉபதேச மருளுமூர்த்தி
வாருகந்தகுவிமுலைபா ருமையாளீன்ற
வளர்மணியேசெழுஞ்சுடரேமயிற்கடம்பா

தாருகந்தப்னிரண்டு கையும்வேலுஞ்
சண்முகனே உன்னிருதாள் சதங்கைகொஞ்ச
சிருகந்துயெனையாளு மையாவாவா
சிவசிவா செந்தில்வளர் சிவனேபோற்றி. 3

அயிலிலங்கச்செழுஞ்சேவல் கொடியும்வாளு
மாருசங்ககுலமழு வழகாயேந்தி
துயிலிலங்குமணிமார்பும் கடப்பமாலுஞ்
சோதியொற்றதிருமேனி சுயம்பிரகாசம்
ஒயிலிலங்குநடையழகும் வுனைக்கொண்டாட்
உன்னிருதாள்சதங்கைகொஞ்ச வுகந்தேவந்து
செயிலிலங்கயெனைக்கார்க்க அய்யாவாவா
சிவசிவா செந்தில்வளர் சிவனேபோற்றி. 4

முற்றுநவரத்தினமுடி யசையுமுல்லை
முறுவலொருகனிவாயு முகங்களாறுஞ்
சற்றுகுராமாதுவள்ளி தெய்வானை சூழ
மயில்சேவல்கொடியிலங்க வன்புகூர்ந்து
எத்தேசகாலமுந்தன் பாதம்போற்றி
எளியேனான்தெண்டனிட யெனைநீகாக்க
சிற்றடியிற்சிலம்புகொஞ்ச அய்யாவாவா
சிவசிவா செந்தில்வளர் சிவனேபோற்றி. 5

கஞ்சமலரணியுந்திரு வுந்திமார்புங்
 காதிலிசைகுண்டலமுங் கையில்வேலுந்
தஞ்சமென்றோர்க்கருள்புரியு மமுதவாயுஞ்
 சண்முகனே வுன்னிருதாள் சதங்கைகொஞ்ச
அஞ்சலென்றவந்தடியேன் றன்னைக்காக்க
 அழகானமயிலேறி வடியேன்முன்பு
செஞ்சதங்கைகலகலென அய்யாவாவா
 சிவசிவாசெந்திலவளர் சிவனேபோற்றி. 6

பழம்பொருளேமனோன்மணியா ளீன்றெடுத்த
 பாக்கியமேமெஞ்ஞானப் பவுசேவேதத்
தொழும்பொருளேயிடையின் கலைசூழியின்மீதில்
 துலக்குலம்புரிந்தருளுஞ் சுவாமிநாதா
இளம்பொருளேவள்ளியம்மன் தெய்வானை
 யின்பசுகநாயகனே யெளியேனுள்ளஞ்
செழும்பொருளேயென்குருவே சித்தேவாவா
 சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 7

விரிவுற்றதோகைமயில் மீதிலேறி
 வீரவாகுதம்பிமார் மிக்கவீரர்
அரிவுற்றபூதபடை சூழ்ந்துமேவ
 அயல்சேவல்கொடியிலங்க அன்னைக்காவும்

வரிவுற்றவள்ளிஅம்மாள் தாய்தெய்வானை
வலமிடமாயெழுந்தருளி மனதுகூர்ந்து
தெரிசித்துநான்போற்ற வய்யாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 8

மெய்யுற்றபரஞ்சுடரே கருணைமூர்த்தி
வேதாந்தமெய்ப்பொருளே அமலநாதா
மையுற்றகூர்விழியாள் வள்ளியம்மாள்
வசிகரசிகாமணியே வாவாயென்முன்
கையுற்றவேர்துலங்க இடைதள்ளாட
கனகபதசிலம்புதண்டை கலீரென்றேமுன்
மெய்யுற்றநான்போற்ற வய்யாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 9

கடம்பணிந்தபுயமிலங்க யிடைதள்ளாடி
கரங்கள்பனிரெண்டிலகை வயிரமுத்து
வடம்புனைந்தமார்தனில் குழையிலங்க
மதிமுகமுஞ்சடைமுடியும் பளபளென்ன
நடம்புரிந்தபதந்துலங்க சதங்கைகொஞ்ச
நறுமலர்கள்கமகமென நாயேனுள்ளந்
திடம்புரிந்துயெனையாளு மையாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 10

சருவலோகநாயகனே விஞ்ஞைமூலத்
தலக்கொழுந்தேமெஞ்ஞான தாயாம்வள்ளி
சிருமருவுபாகரனே பரங்கிரியில்சுவாமி
யந்தவளும்வாலசுப்பிர மண்யதேவா
அருணகிரிநீலகண்டர் மனோன்மணியாள்
அருள்நிறைந்தகண்மணியே அழகேஞான
திரவியமேயென்குருவே சித்தேவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 11

மந்திரஞ்சேர்மெய்ப்பொருளே ஞானமூர்த்தி
வாலையம்மாளீன்றெடுத்த மரகதமேமூலந்
தந்திமுகன்றனைப்படைத்த சுவாமிநாதா
சகலசித்துமாடுகின்ற சற்குருவேஞான
சுந்தரமேவள்ளிதெய்வ யானைநேயா
துரந்தரமேசௌந்தரமே துலங்கவெந்தன்
சிந்தைகுடிகொண்டருளு மையாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 12

அறியாதயேகவெளி வீதியாகி
யகண்டபரிபூரணமாய் வாசியோகஞ்
சுழியாகிசுழிமுனையில் சூட்சமதாகி
துலங்குகின்றவித்துவச நாதமாகி

ஒளியாகிப்பரஞ்சுடரா யுருவமாகி
ஒன்றிரண்டாய்மூன்ருக உலகமெங்குந்
தெளிவாகவிளையாடு மையாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி 13

கைகொடுத்துமெள்ளமெள்ள வாவாவென்ருல்
கால்தூக்கிநடக்கநடை காட்டியென்னை
பையேனும்நடைவருமோ தூக்கினுலும்
படுத்திருந்து தூங்குமுன்னே பரனேயுந்தன்
மெய்யருளே தான்காட்டி ஞானங்காட்டி
விந்தைமலர்தான்காட்டி வியாளக்கொண்டு
செய்தவர்க்குஇதுசமய மையாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 14

நலங்கள்பெறஆறெழுத்தின் பொருளுங்காட்டி
நடுவில்நின்றமுதலெழுத்தின் பொருளுங்காட்டி
இலங்குகின்றவிதிவாசல் நாலுங்காட்டி
சூழ்ந்துநின்றநல்வீர சொரூபங்காட்டி
துலங்குகின்றதெய்வானை மயில்சேவல்பேந்தி
யென்னிருகண்விழிகாணத் தோன்றிகாட்டி
சிதங்கைபதந்தனைக்காட்டு மையாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 15

அன்பருளமேவுகின்ற நாயகனேவாவா
அரகராஆறுமுக சுவாமிவாவா
உம்பர்குடிவாழவந்த நாயகனேவாவா
ஓம்நமசிவாயகுரு தேசிகனேவாவா
யென்பெருமாளென்சுவாமி நாதாவாவா
யென்கோவேயென்னையாளும் நாயகனேவாவா
தென்பொதிகைமுனிபணியு மையாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 16

கிரிலங்குங்கூந்தல்மின்னாள் மோகங்காட்டி
காமயிதழ்சுகங்காட்டிக் கருணைகூர்ந்து
நேரிலங்குந்தமிழ்காட்டி ஞானங்காட்டி
நினைவிலுமறியாத அருளுங்காட்டி
தாரிலங்குந்திருமார்புந் தோளுங்காட்டி
சண்முகமும்பன்னிருகை வேலுங்காட்டி
சீரிலங்குப்பதங்காட்டு மையாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 17

ஆசையெனும்பேரின்ப பொருளுங்காட்டி
அஞ்செழுத்திலெழுத்தி னருளுங்காட்டி
பூசைசெய்யும்விதிப்படியே முறையுங்காட்டி
பூரணமாய்மெஞ்ஞானப் பொருளுங்காட்டி

மாசிலாப்பரஞ்சோதி மணிபோலெந்தன்
மனதிலொன்றும்பிரியாத மௌனங்காட்டி
தேசிகனேயெனையாளு மையாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 18

உருப்படுத்தியாளாக்கி யெழுந்தபிள்ளை
ஓதுதற்குயிசைகாட்டி உள்ளொளிக்குள்
பொருந்தியைந்துபுலன்களையு மொன்றாய்க்கூட்டி
பூரணமாய்மெஞ்ஞானப் பொருளுங்காட்டி
கருத்திலொன்றுமபிரியாம லருளுங்கூட்டி
கலவியின்பசுகங்காட்டி கருணைகூர்ந்து
திருத்தியெனையாட்கொண்ட வையாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 19

நானுந்தன்பதமுழுதும் நம்பினேன்வா
நற்கதிதந்தாண்டருள்வாய் நாடிநீயுந்
தானுந்தன்கிருபைசெய்து அருள்புரிவாய்
தமிழிசையும்விசையுமுற்றும் தந்துகாப்பாய்
மானீன்றபூங்கொடியாள் கானிலவள்ளி
மாத்தெள்ளிகொடுகதுக்கினை மாவின்மிக்க
தேனுண்டகனிவாயா அடயாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 20

வாடுகின்றமெய்ப்பொருளே அய்யாவாவா
பாக்கியமேமெஞ்ஞான பவுசேவாவா
நாடுகின்றயென்குருவே சாமிவாவா
நாதாந்தவசனியாள் பாலாவாவா
ஆடுகின்றநாதாந்தப் பொருளேவாவா
ஆச்சரியவருள்புரியு மடியேனுள்ளே
தேடுகின்றமெய்ப்பொருளே அய்யாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி 21

உன்பதத்தைக்காணாத விழிதானென்ன
உன்செயலைப்பாடாத வாய்த்தானென்ன
அன்புடனேயுனை துதியாச் சிந்தையென்ன
அனுதினமுஞ்சேர்வைசெய்யாக் கைதானென்ன
நம்பனைத்தியானஞ்செய்யா மனந்தானென்ன
நாயுடலைவளர்த்துமென்ன யிருந்துமென்ன
தென்பொதிகைமுனி பணியு மையாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 22

சுப்பய்யாஎன்சுவாமி வாவாவென்று
துதிக்கமிகவடிபணிந்து அழைத்தவேளை
அப்பய்யாயென்முன்னே வருவதற்கு
ஆயாசமேதுசொல்லும் மடியேனுன்னை

எப்பய்யாமறைந்திருந்தேன் குமரகளே து
இதுவேது அறிந்ததில்லை யெனக்கே அன்பாய்
செப்பய்யாவாய்திறந்து வய்யாபாலா
சிவசிவா செந்தில்வளர் சிவனேபோற்றி. 23

விரிசமலோன்பரவுகின்ற விமலாவாவா
வேதாந்தமெஞ்ஞான விசாகாவாவா
பரிபூரவனொளியேதம் பரனேவாவா
பரமகுருசாமிகந்த சுவாமிவாவா
அரிகமசிவாயமெனும் பொருளேவாவா
ஆறெழுத்தில் அமர்ந்தருளு மருமுகனேவாவா
திரிபுரதாண்டவராய அய்யாவாவா
சிவசிவா செந்தில்வளர் சிவனேபோற்றி. 24

அப்பனேவாசற்குருவாம் அண்ணனேவாவா
அங்குமிங்குமாய்நிறைந்த வழகேவாலா
சுப்பய்யவாமுத்தய்யவா துரந்தராவாவா
சுந்தரியாளீன்றெடுத்த துரையேவாவா
இப்பவாயிங்குவா யென்முன்னேவா
வெளியேனைக்காத்தருளுஞ் சுவாமிவாவா
செப்பரியமுன்பொருளே யென்னையாவாவா
சிவசிவா செந்தில்வளர் சிவனேபோற்றி. 25

அலங்காரரவிமதிசூழ் மலையுஞ்சார்பும்
வழுர்தநதிசுத்திவரு மல்லிதேசம்
இலங்குகின்றமார்த்தூரில் நடுவேகம்பம்
யெட்டிரண்டுஞ்சுகர்த்துவைத்த வட்டவீடு
துலங்குகின்றமேல்வாசல் துணிந்தவீடு
தூக்கியிருகால்பாதந் தொந்தோமென்று
சதங்கைபதந்தனைக்காட்டி அய்யாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 26

அன்னையும்நீதந்தையும்நீ யென்னையாளுஞ்
சற்குருநீவென்றழைத்தால் தமியேன்முன்னே
வந்தினுலுன்குலத்தில் தாட்சியாமோ
வாராமலிருப்பதற்கு வழக்கேதுண்டோ
யெந்தனுக்குசேனையுண்டோ வுனைப்பிடித்து
வெளியேன்முன்கொண்டுவர தொந்தையோசொ
செந்திநகர்தனில்வாழு மையாவாவா [ல்
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 27

எடுத்தமுறைதவறும லிருக்கவேணும்
யெங்கிலுமுன்செந்தமிழைப் பாடவேணும்
தடுத்தோரைவாயடக்கச் செய்யவேணும்
சடாட்சரத்தில்வுன்பெருமை நாட்டவேணும்

அடுத்தோர்க்குவுன்செயலைக் காட்டவேணும்
அனுதினமும்பாதமலர் சூட்டவேணும்
திடத்துடனெனையாளு மையாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 28

முப்பொருளே தப்பரமே யகண்டவீதி
முடியிளங்குகோமளமே முதலென்கோவே
அப்பனேவாவென்றுகெஞ்சி யழைப்பதல்லால்
அதட்டிவழைப்பதுண்டோ ஆர்தான்சொல்லுன்
இப்படியாய்த்திருப்பரங் குன்றநேச
பிரக்கமதுகிருபைவைத்து பெளியேனுன்மேல்
செப்புதமிழ்க்கண்டுகந்து அய்யாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 29

என்மனதுவாடுவது கண்டிருந்து
மெவர்க்குவந்தவிருந்தெனவே இருக்கலாமோ
உன்மனதுகல்லோதா னிரங்கொணாதோ
வோதுதமிழ்கேட்கிலையோ உலகமெல்லாந்
தன்மனதுநீயாமோ நான்தானுன்மேல்
தானினைத்தசித்துதந்து ரட்சியுமையா
தென்பொதிகைமுனிபணியு மையாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 30

நீவாவாகாத்தருள் வெளியேனுள்ளம்
நினைத்தவரமருள்புரிவாய் நீதானப்பா
தாய்வாவாசுவாமிநீ வாவாவென்று
தமியேன்கைக்குதவிதந்து ரட்சியுமையா
வாவாவென்றழைத்தால் வந்தென்முன்னே
வாராதங்கிருப்பதற்கு வழக்கேதுண்டோ
தேவாதிதேவாவா அய்யாவாவா
சிவசிவாசெந்தில்வ்ளர் சிவனேபோற்றி. 31

பரமனருள்நாயகனே வாவாவாலைப்
பார்வதியாள்பாலகனே வாவாயெங்குஞ்
சர்வவுயிர்நாயகனே வாவாசித்துத்
தமிழ்சொரியும்நாயகனே வாவாசித்துக்
கருணைபுரிநாயகனே வாவாயென்னை
காத்தருளும்நாயகனே வாவாயெந்தன்
திருவருள்செய்நாயகனே அய்யாவாவா
சிவசிவாசெந்திலவள்ர் சிவனேபோற்றி. 32

ஏனய்யாவென்மீதில் மோடிவேண்டாம்
யேழையல்லோபாலனல்லோ யெளியேன்யானும்
நானய்யாவுந்தனிரு பாதம்போற்றி
நாதனேவாவென்றழைத்தால் நாயேன்முன்னே

தானய்யாமுன்தோன்றி யருள்புரிந்து
தற்காத்துரட்சிவள்ளி தாயாள்தந்தை
தேனையாஉண்டசனி அய்யாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 33

நானென்றவல்லபத்தை தீர்க்கவேணும்
நாடியானசுழிமுனையை நோக்கவேணும்
தானென்றவன்பொருளை யாக்கவேணும்
சாகாமல்சற்றுமனங் கிடைக்கவேணும்
வாவென்றவொளியொளிதான் தோணவேணும்
வடிவேலுமயிலுநான் காணவேணும்
தேனுண்டவாயானே அய்யாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 34

பரந்துநின்றயென்மனத்தைத் திருத்தவேணும்
பலர்முகம்பார்த்துருகாம லிருக்கவேணும்
உறைந்தெழுந்தஆங்கார மொடுங்கவேணும்
உண்மைதனில்மௌனமெலா மடங்கவேணும்
நிறைந்தசடாட்சரமுமனம் நாடவேணும்
நிங்காமற்கருணைபொழிந் தாடவேணும்
சிறந்திடவேயிட்சணமே அய்யாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 35

ஆக்கைகரம்பெலும்புதசை உதிரம்சிந்தி
ஐம்புலன்களோடுமுன்னே அய்யாவுன்னை
பார்க்கவேணும்கண்குளிர முகங்களாறும்
பன்னிரண்டுபுயமார்பும் கடம்புஞ்செய்கை
ஏற்கமயில்சேவல்வள்ளி தெய்வயானை
இலகுசத்திவேல்வீர வாகுவீரர்
சீக்கிரமாயெந்தன்முன்னே அய்யாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 36

ஆடுகின்றபரஞ்சோதி மணியேநான்கும்
அறுமறைக்குவல்லவனே அமுதேஆறு
வீடுகின்றவிளங்குபரஞ் சுடரேஞான
விளக்கொளியே வேதாந்தவேதமூர்த்தி
கூட்டின்றவிளையாட மனதுகூர்ந்து
கோலமயின்மீதேறி வருவாயென்று
தேடுகின்றவெனியேன்முன் னய்யாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 37

நாவாலும்மனத்தாலுந் தியானத்தாலும்
நம்மாலும்தமிழாலும் நாடிநாடி
வாவாவென்றளிக்கவரா திருப்பதுண்டோ
மனதிறங்கிஅடியேன்முன் வாவாசுவாமி

பாலாலேவுனேத்துதித்து உலகத்தோர்கள்
பசுவுபெற்றெண்ணுலுமுந்தன் பாதங்காண
தேவாவெனுமையாவென் னையாவாவா
சிவசிவா செந்தில்வளர் சிவனேபோற்றி. 38

நாட்டமுற்றேனுன்மீதி லன்புவைத்து
நாளழைத்தால்வருவதற்கு நாயேன்முன்னே
கோட்டையுண்டோவழியுண்டோ வழிகோணுதோ
கூப்பிட்டால்தமிழோரே செவிகேளாதோ
வாட்டமுற்றுநான்மயங்க லாமோநீதான்
மனதிறங்கி அடியேன்முன் மகிழ்ச்சிகூர்ந்து
தேட்டமுற்றேனும்பதத்தி லன்புவைத்து
சிவசிவா செந்தில்வளர் சிவனேபோற்றி. 39

யேகமுற்றபரஞ்சுடரே ஞானமூர்த்தி
யென்னைதயேபொதிகைவரை யிருக்குமநாதா
ஆகமுற்றசெழுங்கனியே யேழைக்கேற்ற
அப்பனேயென்னைமுழுதும் ஆண்டசாமி
தாகமுற்றுமுனேத்தேடி வருந்துகின்ற
தமியன்முன்வரவேணும் சமையமையா
தேகசித்திதந்தருளும் அய்யாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 40

வச்சிரவேலேந்துமீரூர் கரமுந்தோளும்
மணிமுடியுங்குண்டலமும் மயிலும்சேவல்
கச்சிடையும்வச்சிரமும் யிலங்குமார்பும்
காதிலிடுங்குண்டலமும் கையும்வேலும்
தற்சொரூபந்தன்னைக்காட்டி யெளியோன்கண்கள்
தரித்துன்னிமிசைத்ததெல்லாம் தருவாய்வேலா
தெட்சணுயனம்பரவு மய்யாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 41

குருவருளையென்னளும் நோக்கவேணும்
கோபமென்றமுனையதனைப் போக்கவேணும்
கருவியருள்மாய்கைவலை நீக்கவேணும்
காவடியேகாடிமனந் தூக்கவேணும்
அரகராசிவசுப்ர மணியாவென்று
அனுதினமு மலர்ப்பதத்தைக்காணவேணும்
திருவருள்தந்தெனையாளு மையாவாவா
சிவசிவா செந்தில்வளர் சிவனேபோற்றி. 42

அடங்காமலோடுகின்ற பேய்மனத்துக்
கருள்காட்டி அரவணைத்து அன்பாய்ஞான
வடம்பூட்டிபிடித்திருக்கி யரிவென்றேங்கு
மாணிக்கம்பத்தோடே வரிந்துசேர்த்து

உடங்கொள்ளும்படியாயி றெழுத்தால்முட்டி
பொடுங்கிநின்றேனுளந்தனிலே யுகந்தென்னுளும்
திடங்காணும்படிக்கருள்செய் அய்யாவாவா
சிவசிவா செந்தில்வளர் சிவனேபோற்றி. 43

நாசிசெவிகண்மூக்குப் புருவமையா
நடுவிலொருநாசியிடை பின்கலையான
நாசியெனுஞ்சுழிமுனைக்கு நீங்காவட்டம்
வட்டமதில்வேல்வீடு மௌனவாசல்
ஓசைநடம்புரிந்தருளும் பதமுங்காட்டி
யுன்கிருபைசெயல்காட்டி யுகந்தோமென்று
தேசிகனேயெனையாளு மையாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 44

உன்கிருபைசொல் லெனக்குத் தரவும்வேணும்
ஊர்வழிதுணையெனக்கு வரவும்வேணும்
யெங்கிலுமுன்செந்தமிழைப் பாடவேணும்
யெதிர்த்தோரைவாயடக்கிப் போடவேணும்
அங்கிலும்நீகின் றுவிளை யாடவேணும்
அனுதினமும்மலர்ப்பதத்தைச் சூடவேணும்
செங்கையிலேவேலிலங்க அய்யாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 45

மடம்பொருளேயிதுவென்ன மாயவாழ்வு
தான்பொருளென்றெண்ணிலேன் தமியேனுந்தன்
நடம்பொருளே தான்பாரா திருந்ததாகில்
நானுமெங்கேசெல்வதினி நாயனேசொல்
இடம்பொருளேவல்தந்து தான்தானென்று
மென்னுளும்நினைத்தசித்தி யின்பங்காட்டி
திடம்பொருளே தந்ததுவும் அய்யாவாவா
சிவசிவா செந்தில்வளர் சிவனேபோற்றி 46

ஓசைகொண்டசதங்கைதண்டை சிலம்புகொஞ்ச
யுகந்துநடம்புரிந்த முன்னேகாட்டி
ஆசைகொண்டுவருந்தியுனை நினைத்தேன்காண
அப்பனேவாவென்று யழைப்பதல்லால்
ஏசிலம்புகொண்டுமெள்ள யிங்குவாவென்
றேசவுனைப்பிடித்தடிக்க வெண்ணிலேன்காண்
தேசமெங்குநிறைந்தருளு மய்யாவாவா
சிவசிவா செந்தில்வளர் சிவனேபோற்றி. 47

நவிலுமென்செந்தமிழைப் பாடவேணும்
நாடோறுமுன்பாதம் கொண்டாடவேணும்
ஏவல்செய்துதேவதைகள் நிற்கவேணும்
மென்னுளும்வீரர்சுத்தி காக்கவேணும்

வசியமாய்வள்ளியம்ம னிடங்தெய்வானே
மலர்ப்பாதம்நீங்காமல் நிற்கவேணும்
சேவல்கொண்டமயிலிலங்க அய்யாவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 48

தங்கமுடி சூடுகின்ற பரனேபோற்றி
சகலகலேவல்லவனே சுவாமிபோற்றி
திங்கள்முடிநஞ்சுடையார் பாலாபோற்றி
செகசூட்சிவுமையவள் கண்மணிபோற்றி
செங்கைவடிவேலவனே கடம்பாபோற்றி
செகமெல்லாமுண்டருள் மால்மருகாபோற்றி
மங்கைவள்ளிதெய்வானே மருளர்போற்றி
மயூரகிரிதனிலுறையப் போற்றிபோற்றி. 49

அத்தனருள்பரமகுரு சுவாமிவாவா
அங்கபற்கண்புத்திரனே அய்யாவாவா
முத்திதருங்குமாரு மூர்த்திவாவா
மூத்தையாநால்வேதம் முதலேவாவா
பத்தர்மனதியானவள்ளி பங்காவாவா
பச்சைமயில்வாகனனே பரனேவாவா
சத்திமுனிவோர்பணியுங் குகனேவாவா
சிவசிவாசெந்தில்வளர் சிவனேபோற்றி. 50

ஆதியாயுலகெங்கும் நிறைந்தசோதி
அன்பத்தோரட்சரத்தி னிறைந்தசோதி
ஓதுகின்றசெந்தமிழின் குருவேசோதி
ஓங்காரமானவெழுத் தாகந்தசோதி
நீதியாய்சடாட்சரத்துள் ளாடும்சோதி
நிஷ்களானந்தபர மானசோதி
சாதிபலபேதமெல்லாம் சமயசோதி
சமயமிதுவந்தென்னை காத்தருள்வாய்சோதி. 51

ஆராரு ஆய்மூன்று கவிஞன்சொல்லி
ஆராதனைசெய்ப அடியேன்முன்னே
மாறாதவேலுபனி ரெண்டுகையும்
வள்ளிதெய்வானையொடு மயின்மீதேறி
காராதபதஞ்சிலம்பு கலீரென்றேடே
கலிகூத்துவுந்தனிரு பாதம்போற்றி
தீராதநோய்தீர்க்கும் அய்யாவாவா
சிவசிவா செந்திலவனே சிவனேபோற்றி. 52

சிவசெந்திமாலை.

முற்றிற்று

---

## பல்லிவிழும் பலன்.

தலையில்கலகம், புருவமத்தியில் ராஜசிநேகம் மேலுதடு விரயம், கீழுதடு லாபம், மூக்கு ரோகம், வலது காது ஆயுள் விருத்தி, இடது காது வர்த்தக லாபம், கண்கள் சிறைப்படல், முகவாய்க்கட்டை அரசபயம், கழுத்து பகை நாசம், வலதுதோள் ஆரோக்கியம், இடதுதோள் ஸ்திரிசம்போகம், வலதுமணிக்கட்டு பீடை, இடது மணிக்கட்டு பேன்மை, ஸ்தனம் பீடை, வயிறு தானியலாபம், மார்பு லாபம், தொப்புள் ஆபரணலாபம், இரண்டுபக்கமும் லாபம், தொடைகள் தாய்தந்தையர்க்குப்பீடை, முழங்கால் கணைக்கால் சுகம், பாதம் அலைச்சல், புட்டம் சுபம், நகம் பொருட்சேதம், குதம் குய்யம் வறுமை, மயிர் மரணம்.